உ

சிவமயம்

# திருக்குறட் குமரேச வெண்பா

மூலம்

## அறத்துப்பால்.

ஆசிரியர்

ஜெகவீரபாண்டியன்.



ஸ்ரீ ராம பிரஸ் தூத்துக்குடி

பிரபவ-௵ வைகாசி-மீ

1927

All rights reserved

விலை [illegible] -4-

வணக்கமும் அவையடக்கமும் உட்பட இதில் முந்நூற்றெண்பத்திரண்டு வெண்பாக்கள் அடங்கியுள்ளன ஏனைய பின்னர் வெளிவரும்

செவிக்கும் வாய்க்கும் சிந்தைக்கும் இனியவாய சிறந்த சொற்செறிவும், இருவினையும் நீக்கும் அருமருந்தனைய உயர்ந்த பொருட்பொலிவும், பொருந்தி விளங்கும் நமது தமிழ் வேதத்தின் அமிழ்தமயமான நீதியொழுக்கங்களையும் பொருள் நுணுக்கங்களையும் அறிந்து அனுபவித்து ஆனந்தமடைவதே மக்கட் பிறப்பின் மாண்பயனாகும் அருமையான இத்திருநூலை அருளிய நாயனாரே நமக்கு நல்லதாயாராவர் தாய்மார், தனவமுதூட்டி உடற்குறுதி செய்வர் நாயனார் குறளமுதூட்டி உயிர்க்குறுதி செய்கின்றார் இக்கருணை வள்ளல் காட்டியுள்ள குறள் நீதிகளும், அவற்றிற்கு உரிமையான பல அரிய சரிதங்களும், இதில் ஒருங்கமைந்துள்ளன பாலொடு கலந்த நீர் பாலாகுமாறுபோல வள்ளுவர் நூலொடு கலந்த இதுவும் ஒரு நூலாகும் என்பது சால்பாம்.

எவ்வகையினாலாவது திருக்குறளின் பயனை எல்லாரும் பெற்று இன்புறவேண்டுமென்பதே என் வேட்கை இவ்வேட்கையே எனது நாணத்தை ஒருபுறமொதுக்கி என்னை இந்நூலை இயற்றும்படி செய்தது இந்நல் வேட்கையை என்னுள்ளத்தில் தோற்றுவித்து அதனை நிறைவேற்றிய திருவருளையும் குருவருளையும் சிந்தித்து வந்தித்து வாழ்த்துகின்றேன்

திருவள்ளுவர் நிலையம்<br>
தூத்துக்குடி<br>
வைகாசி 1–6–1927

ஜெகவீரபாண்டியன்

# Introduction.

1 The present volume is a fitting companion to Thirukkural, the divine work of great creative genius Thiruvalluvar who is universally revered as a saint throughout the Tamil World

2 This book, the first of its kind in the field of Tamil Literature, is composed by the Great Scholar and Poet **Jagaveerapandian** of Ottanatham and every page of it, which is replete with the grace and splendour of word beauty enhanced by the ethical import of each couplet, is a clear proof of the author's deep penetration and critical powers of research in the religious literature of the land

3 The abstract ethical import of each couplet of the Kural is illustrated by suitable anecdotes culled out from the Puranic and other Hindu literature of the past and is written in the very same sweet rythym as that of the Kural which is a striking evidence of the author's poetic composition which is as much inspired as the original itself For the reason that each Kural is definitely backed and aptly illustrated by some Puranic anecdotes and other, the value of original work is enhanced hundred fold, its meaning of each couplet being made richer and fuller Hence such a useful and interesting work as the present, which is a genuine and patriotic attempt on the part of the author to renovate the past will surely attract the attention of the Tamil world

4 At the same time, wherever the reader may turn his eye through the 1332 stanzas of this volume, each section bears the strong impression of the author's profound scholarship, critical powers of research and admirable talents of poetic composition. For the reasons stated above it is no doubt that the present volume is a rich addition to the Tamil literature, the Tamil world itself owes a deep debt of gratitude to the author for having broken a new ground in the field of research

5 This book must be in the hands of all lovers of Tamil literature, especially the readers of Kural if the full meaning of the divine work should be understood in its proper setting. Also the work may be placed in the hands of school boys and taught regularly as class lessons to them to produce in them a love and reverence for the past.

6 It is finally hoped that by the kind of reception given to the present volume by Tamil reading public, the author would be spurred into fresh composition of a similar nature and thus enrich the Tamil Literature

**Swami Vidyanantha,**
*Madras*

உ

## சிறப்புப்பாயிரம்.

வள்ளுவராய வநததிருத தெளளமுதாந திருககுறளை
மருவி யினபம
துளளுமுயா குமரேச வெண்பாவென றலகுவநது
துதிககச் செயதான
கொளளுமிபறபுலமையொடு கோதறுநறகுணஙகளெலலாங
கொணட தூயோன
தெளளுபுகழச செகவீர பாண்டியனும கவிராஜ
சிஙகம மனனே

# இப்புத்தகத்தில் அடங்கியுள்ளவை.

## காபபு

போதந தருசெய்ய பொயயா மொழிபுணாததி
ஓதுகினற இநநூற குறறதுணையாச—சோதிமிகு
மாதஙகந கொணடே மகிழபாமன தநதவொரு
மாதஙகந கொண்டேன மனம

## அவையடக்கம்

அஙகணநீர் கங்கை அடைநதவுட னேபுனித
மஙகலநீா ஆகி வயங்காதோ—இஙகெனது
புனபாவும வள்ளுவாதம பொனபாவைச சோநததனல
இன்பாகும அனறே இனி

5. வாட்புலிபோற் பாய்ந்துகொன்ற வல்வினையேன் சேரவில்லை
கோட்புலியார் தம்மைக் குமரேசா—கேட்பின்
இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. (௫)

6 நாடு நெறிநின்ற நல்லசனர் காதியரென்
கூடினார் நீள் வாழ்வைக் குமரேசா—ஓடும்
பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார் (௬)

7 வானவரோ நஞ்சினால் வந்த துன்பம் மாற்றவுமை
கோனடியைச் சேர்ந்தார் குமரேசா—எஞோ
தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது (௭)

8 நாற்றக் கடலைக் கடந்தான் சனகனை
கோதுறயர் மறவோர் குமரேசா—தீதில
அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது (௮)

9. வேதன் உயர்தலையும் வெண்டலைபாய் வீழ்ந்துபலிக்
கோதடைந்த தென்னே குமரேசா—பூதலத்திற்
கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. (௯)

10. சோர்ந்ததிண்ணர் வெம்பிறவி தீர்ந்தாரின் சேர்ந்தார்
கூர்ந்தாழ்ந்தார் என்னே குமரேசா—ஆர்ந்த
பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார் (௰)

முதல் அதிகாரம் கடவுள் வாழ்த்து முற்றிற்று

16 பண்டோர் பசும்புல்லும் பாரார் திடைக்காட்
கொண்டார் வரகேன் குமரேசா—கண்ட
விசும்பிற் றுளிவீழி னல்லாலமற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது (௬)

17 மண்டுகடல்பெற்றிருந்தும்வானம்போயெனப்பண்டுமழை
கொண்டுவந்தார் மூவர் குமரேசா—கொண்ட
நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின் (௭)

18. வென்றி மதுரையில் முன் மெய்ச்சிறப்பும் பூசனையும்
குன்றி நின்ற தென்னே குமரேசா—என்றும்
சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு (௮)

19 பண்டிலர் நோன்பிழந்தார் பாண்டியனும் பாவலரைக்
கொண்டில்லனென்ன விட்டான் குமரேசா—கொண்டதொரு
தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின் (௯)

20 வானீர் இலாமையினால் மாதவரும் அத்திரிபோக்
கோனுமெனச் சொற்றார் குமரேசா—ஊனமிலா
நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு. (௰)

2 வது அதிகாரம் வான் சிறப்பு முற்றிற்று

—oo:✥:oo—

# 3-ம் அதிகாரம் நீத்தார் பெருமை

## அஃதாவது துறந்தாரது பெருமை

21 மண்டுபுகழ் மாணிக்க வாசகர்சீர்ப் பனுவல்
கொண்டுபுகல் வானேன் குமரேசா—கொண்ட
ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு. (௧)

22. பண்டு கடல்பருகிப் பாரசமணைச்செய் மாதவன்சீர்
கொண்டதுணை என்னே குமரேசா—கண்டு
துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று (௨)

23 பண்டு துறவுகொண்ட பட்டினத்தார் மாண்புலகில்
கொண்டதுயர் வென்னே குமரேசா—கண்ட
இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு. (௩)

24 கொண்டபொற் கொண்டொன் றுங்கொள்ளாத தங்கமாழ்
கொண்டனர்வீ டென்னே குமரேசா—கொண்ட [வார்
உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து (௪)

25 மாதவத்துக் கோதமனார் வாய்மொழியின் வண்மையே
கோதகலக் கண்டார் குமரேசா—பூதலத்தில் [வா
ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி (௫)

26 விட்டுணு மெய்ப்பத்தவத்தை மேவினான் சந்தநுவேன்
கூடினன் காமம் குமரேசா — நாடச்
செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார் (௬)

27 உற்ற சுகன்பால் உலகெலாம் நீங்க நிற்கவல்லன்
கொற்றமுற்ற தென்னே குமரேசா — முற்றும்
சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு (௭)

28 காட்டினக்க கிரனசீர் கம்பன் பெருமையவர்
கூட்டுமொழி யென்னே குமரேசா — பாட்டில்
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும் (௮)

29. வென்றிக் கபிலர் வெகுளியால் ஏனசநர்
குன்றி மடிந்தார் குமரேசா — என்றுங்
குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது (௯)

30 பண்டேன் சடபரதர் பலவுயிர்க்கும் செந்தண்மை
கொண்டு நடந்தார் குமரேசா — கொண்டாடும்
அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான் (௰)

௩-வது நீத்தார் பெருமை முற்றிற்று

திருக்குறட் குமரேச வெண்பா

# 4-ம் அதிகாரம் அறன்வலியுறுத்தல்

அஃதாவது அறத்தினது சிறப்பையுணர்த்துதல்

31. பண்டுபல் அல்லலுற்றும் பாண்டவர்கள் என்றுந்தம்மைக்
கொண்டார் துணையாகக் குமரேசா—மண்டு
சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்
காக்கம் எவனோ உயிர்க்கு. (க)

32 வீடணனார் ஆக்கமுற வெவ்விலங்கை மன்னவனைக்
கூடினனே கெட்டு குமரேசா—கேடில்
அறத்தினூஉங் காக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு (உ)

33 தண்டாமல் செய்தாரே தண்டி யடிகளாரும்
கொண்ட வினையைக் குமரேசா—கண்டென்றும்
ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல் (௩)

34 வேடமின்றிப்பூசையின்றிமெய்யறத்தைச் சாக்கியனார்
கூடினார் என்னே குமரேசா—ஓடும்
மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற (௪)

35 வெற்றி மிகுத்தக்கன் வேள்வியறம் செய்துமேன்
குற்றமிக வுற்றான் குமரேசா—உற்ற
அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம் (௫)

# இல்லறவியல்

## 5-ம் அதிகாரம் இல்வாழ்க்கை

அஃதாவது மனைவியோடு கூடி ஒருவன் இல்லின்கண்
இருந்து வாழும் இயல்பு

41 என்னுடற் றலைவோர்க்கும் இன்றுணைபா கன்றுமெய்சார்
கோனுடைவல் லாளன் குமரேசா—ஞானமுடன்
இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை. (௧)

42 உற்றதுணை யாபமுன் உதவினனென் பாண்டவர்க்குக்
கொற்ற விராடன் குமரேசா—முற்றும்
துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை (௨)

43 தேடுபுகழ்க் காளத்தி சென்றடைந்தார் தம்மையெல்
கோடாதேன் காத்தார் குமரேசா—பீடுடைய [லாம்
தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்பல் தலை. (௩)

44 வள்ளற் சடையன் வழியென்றுங் குன்றுச்சீர்
கொள்ளநின்ற தென்னே குமரேசா—தள்ளும்
பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல் (௪)

45 மண்டுபுகழ் மாறனார் மாறாத அன்பறனைக்
கொண்டிருந்தார் இல்லிற் குமரேசா—தண்டாத
அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. (௫)

46 தேடித் துறவறத்திற் செல்லார் குசேலரில்லை
கூடியிருந்தார் குமரேசா — நாடி
அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன் (௬)

47 முற்றத் துறந்தாரக்கேன் முனிவரினும் இன்னின்று
கொற்றச் சனகன் குமரேசா — உற்ற
இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாந் தலை (௭)

48 கொற்றத்தவஞ்செய்யும் கோசிகரேன் வேள்விமுற்றக்
கொற்றவனில் வந்தார் குமரேசா — மற்றவரை
ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை யுடைத்து (௮)

49 இச்சையற்ற தன்மகனை யில்வாழ்வில் நில்லென்றேன்
சுச்சகனார் சொன்னார் குமரேசா — மெச்சும்
அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று (௯)

50 மண்டலத்தில் வாழ்ந்திருந்தும் வள்ளுவரேன் தெய்வ
கொண்டாடப்பட்டார் குமரேசா — உண்டாகும் [மென்று
வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும் (௰)

௫-வது இல்வாழ்க்கை முற்றிற்று

## 6-ம் அதிகாரம் வாழ்க்கைத்துணை நலம்.

அஃதாவது ஒருவனது இல்வாழ்க்கைக்குத் துணையாகிய மனைவியினது நன்மை.

51 கொண்டான் சிறுவரவும் கொண்டே சுசிலையன்பு
கொண்டா தரித்தாள் குமரேசா—கண்ட
மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத்துணை. (௧)

52. கொற்றமுற்ற பத்ரகிரி கோன்வாழ்க்கை இல்லாளால்
குற்றமுற்றதென்னே குமரேசா—உற்ற
மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல். (௨)

53 ஒன்றுமில்லாச் சத்தியவான் உற்றானென் இல்லாளால்
குன்றுமல் எல்லாம் குமரேசா—என்றேனும்
இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை. (௩)

54 பண்டேன நளாயினியைப் பற்றற்ற மாதவனும்
கொண்டு மகிழ்ந்தான் குமரேசா—கொண்டாடும்
பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின். (௪)

55. பண்டுமழை பெய்யப் பணித்தாள் அநசூயை
கொண்டுபெய்தத் தென்னே குமரேசா—உண்டான
தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. (௫)

56 கொண்டானைப் பேணிக் குலமங்கை பாக்காசி
கொண்டார் புகழேன் குமரேசா—தண்டாமல்
தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண் (௬)

57 சீதை வனம்புகுந்தும் சீருற்றாள் என்முகன்
கோதை குலைந்தாள் குமரேசா—மாதர்
சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை (௭)

58. வானுலகம் போற்றுகின்ற மாண்பைப்பெண் கண்ணகிதன்
கோனுடனே பெற்றாள் குமரேசா—தானுவந்து
பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு (௮)

59 நாடுஞ் சராகுருவேன் நாணின்றா நண்ணார்முன்
கோடிசெல்வம் வைத்தும் குமரேசா—தேடும்
புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை (௯)

60 பண்டென் அருந்ததியால் பாலரால் சீரெல்லாம்
கொண்டார் வசிட்டர் குமரேசா—உண்டான
மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு. (௰)

௬-வது வாழ்க்கைத்துணைநலம் முற்றிற்று

—ooo—

# 7-ம் அதிகாரம் மக்கட்பேறு

## அஃதாவது மக்களைப் பெறுதலின் சிறப்பு

61 தாபம் திருகண்டார் நற்சிலதார் மக்களுக்கென
கோடிதவஞ் செய்தார் குமரேசா—தேடிப்
பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற. (க)

62 பண்டேன சகரர் பகீரதனால் நீத்கனறு
கொண்டார் புகழைக் குமரேசா—கண்டே
எழு பிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். (உ)

63. பெற்றபொருள் விட்டுமக்கட் பெற்றான் தசரதன்பின்
கொற்றமுற்றான் என்னே குமரேசா—பற்றுகின்ற
தம்பொருள் என்பதம் மக்கள் அவர் பொருள்
தந்தம் வினையான் வரும் (ந)

64 உண்டுமக்கள் கையளைந்த ஒண்கூழை என்னினிதாக்
கொண்டாள் சசிலை குமரேசா—கண்ட
அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ் (ச)

65 தேடுபுகழ்ச் சம்பந்தர் செம்மொழிகேட் டேனமகிழ்
கூடினபார் தந்தை குமரேசா—ஓடிவந்து [ந்தார்
மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு (ரு)

66. மனருடி நினமழலை வாசகமேன கேட்டுவநதார
கோனறைமுடி சாயத்தும குமரேசா—எனறும
குழலினிது யாழினிது எனபதம மககள
மழலைச் சொற கேளா தவர (௬)

67. பாடலியூர்க கோனபுதலவா பலகலையும தேறவனறேன
கோடிவகை செயதான் குமரேசா—பீடுடைய
தநதை மகறகாற்றும நனறி யவையத்து
முந்தி யிருபபச செயல (௭)

68 மண்டு புகழ்பபகவன மக்களறி வாலுலகோர
கொண்டனரேன் இன்பம குமரேசா—கணடுமகிழ
தமமிறறும மககள அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிரக கெலலாம இனிது. (௮)

69. உறறடைநதார சீவகன்சீர ஓதவுவந தாளெனனே
கொற்ற விசயை குமரேசா—முற்றியே
ஈனற பொழுதிற பெரிதுவககுந் தன்மகனைச
சான்றோன எனக்கேடட தாய. (௯)

70. நல்லிரா மன்புரிநதான் நறறாதை யெனனோறறான
கொலலெனுஞ் சொல எனனே குமரேசா—செலல
மகன்தநதைக காறறும உதவி யிவன்தந்தை
யெனனோற்றான கொலலெனுஞ் சொல (௰)

ஏ—வது மககடபேறு முறறிறறு

# 8-ம் அதிகாரம் அன்புடைமை

அஃதாவது தனது மனைவி மக்கள் முதலிய தொடர்புடையா ரிடத்தில் ஒருவனுக்கு இயல்பாகவே தோன்றும் விருப்பமுடைமை

71 கண்டழுதார் கண்ணப்பர் காயக் கதிரோன் சேயுமென்
கொண்டழுதான் முன்னம் குமரேசா—உண்டான
அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும் (க)

72. மோனத் ததீசி முதுகெலும்பை வானவர்தங்
கோனுக்கென் தந்தான் குமரேசா—ஞானமுறும்
அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. (உ)

73 ஆனிரைபால் அன்பால் அருந்தவனை மேலினுங்
கோனுடம்பைக் கொண்டான் குமரேசா—ஆனநிலை
அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு (௩)

74 திண்டோட் குகனன்பு செய்தான் இராமனன்பேன்
கொண்டான் அவன்பால் குமரேசா—உண்டாகும்
அன்பீனும் ஆர்வ முடைமை யதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு (௪)

75 தேடுகின்ற இன்புற்றும் சேரமான் என்சிறப்புங்
கூடயதி னின்றார் குமரேசா—நாடுகின்ற
அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றார் எய்துஞ் சிறப்பு (௫)

# 9-ம் அதிகாரம் விருந்தோம்பல்

அஃதாவது விருந்தினரைப் பேணல்

81 ஈட்டும் பொருளெல்லாம் ஏன்விருந்தைப் பேணுநற்
கூட்டுறவைப் பூதி குமரேசா—நாட்டில் [றேக
இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு (க)

82 தானுண்ணான் ஔவையுண்ணத் தந்தான் அருங்கனி
கோனதிகன் என்னே குமரேசா—மான [லையக
விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று (உ)

83. ஈட்டியவெல் லாந்தேய்ந்தும் ஏனல்லான் பின்னுலவாக்
கோட்டைபெற்று வாழ்ந்தான் குமரேசா—வீட்டில்
வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று (ங)

84 என்றும் அசதியில்லில் ஏன்றோ திருமகளார்
குன்று துறைந்தார் குமரேசா—நன்று
அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல் (ச)

85 வித்தின்றிப் புத்தேன் விளைந்தது வெண்ணெய்ச்சட்ட
கொத்தும் வயலிற் குமரேசா—சுத்திசெய்து [யன்
வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம் (ரு)

86 தேடிவிருந் தோம்பும் சிறந்தோனை வானுலகோர்
கூடியிருந் தாரோ குமரேசா — நாடிச்
செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு (சு)

87. ஓரன்னம் கண்ணற் குதவியதால் பாஞ்சாலி
கூர்பயனைக் கொண்டாள் குமரேசா — பாரில்
இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன். (எ)

88. பற்றற்றான் உள்ளம் பரிந்திரந்தான் ஏன்பின்பு
குற்றமுற்றான் சேடன் குமரேசா — முற்றும்
பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பார் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார் (அ)

89 வாடிவந்த நல்லதங்கை வனபசியைத் தீர்த்திலளேன்
கோடியுடை யாளும் குமரேசா — நாடும்
உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு (கூ)

90 பண்டுதக்கன் மாறுபட்டுப் பார்த்தவுட னேயுமையாள்
கொண்டார் குழைவென் குமரேசா — கண்டெடுத்து
மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. (ய)

கூ-வது விருந்தோம்பல் முற்றிற்று

# 10-ம் அதிகாரம் இனியவை கூறல்.

அஃதாவது இனிய சொற்களைச் சொல்லுதல்

91 மாற்றில் உபாசவர் வாய்ச்சொல்லே யின்சொல்லென்று
கூறினார் என்னே குமரேசா—ஊறுகின்ற
இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல் (க)

92 கண்டு முகமலர்ந்து கண்ணன் குசேலனையே
கொண்டினிமை செய்தான் குமரேசா—அண்டி
அகனமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின் (உ)

93 கண்டான் இனிதாகக் கண்ணனையே யன் இன்சொலுடன்
கொண்டான் விதுரன் குமரேசா—கொண்ட [ன்
முகத்தான் அமர்ந்தினிது நோக்கி யகத்தானாம்
இன்சொ லினதே யறம் (௩)

94 எத்தச் சிறையிருந்தும் இன்சொற் புகழேந்தி
கோதற்றேன் உய்ந்தார் குமரேசா—தீதுற்ற
துன்புறூஉம் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு. (௪)

95 பண்டேன் இன்சொல்லும் பணிவும் அணியாகக்
கொண்டான் அனுமான் குமரேசா—கொண்ட
பணிவுடையன் இன்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற. (௫)

96 நனறென நீதிகளை நாடியென ஞூத முனி
குனறுமுற சொனனுர குமரேசா—துனறுக
அலலவை தேய அறமபெருகும நலலவை
நாடி யினிய சொலின் (௬)

97 தேடிபசிச் சேககிழாா செபபியவோா சொலலாலென
கோடிநலம கொணடாா குமரேசா—நாடும
நயனீன்று நனறி பயககும பயனீன்று
பணபிற றலைபபிரியாச சொல (எ)

98 தீதகலின் சொலலால் திரிசடையேன இனபமெலலாம
கோதகலக கொண்டாள குமரேசா—ஓதும
சிறுமையுள் நீங்கிய இனசொல மறுமையும
இமமையும இனபநதரும (அ)

99. மாறில் விதுரனினசொல மாண்புகண்டு மனனவனென
கூறினுன வனசொல குமரேசா—கூறுகினற
இனசொல இனிதீன்றல காண்பான எவனகொலோ
வனசொல வழஙகு வது (௯)

100. என்னே சிசுபாலன இனனுத கூறியுடன
கொன்னே மடிநதான குமரேசா—அனறே
இனிய வுளவாக இனனுத கூறல
கனியிருபபக காய்கவாந தறறு (௰)

௰-வது இனியவை கூறல முற்றிறறு

## 11-ம் அதிகாரம் செய்ந்நன்றி யறிதல்.

அஃதாவது தனக்குப் பிறர் செய்த உதவியை மறவாமல் ஒழுகுதல்

101 மற்றென்று மாறாமல் மன்னனுக்கேன் கன்னனுயிர்
கொற்றமுறத் தந்தான் குமரேசா — உற்றொன்று
செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது (க)

102. நின்றோள் அயர்தி செய்த சிற்றுதவி யென்பெரிதாகக்
கொண்டாள் தெய்வானை குமரேசா — திண்டோடுங்
காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது (உ)

103 திண்டோள் அனுமான்செய் சீருதவி யென்பெரிதாகக்
கொண்டாள்முன் சீதை குமரேசா — உண்டாம்
பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது (ங)

104 ஓ பக்திசிறு நன்றிக்குட ஏகலைவன் ஏன்விரலைக்
கொய்து கொடுத்தான் குமரேசா — செய்ய
தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். (ச)

105 வாழுந் திருவெய்த வாழ்த்தினளே னௌவைபழங்
கூழுதவி னாக்கும் குமரேசா — வீழும்
உதவி வரைத்தன் றுதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து (ரு)

106 நன்றும் இராமனுயர் நற்கேண்மை வானரக்கோன்
குன்றாதே கொண்டான் குமரேசா—என்றும்
மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு (௬)

107 மாறில் சடையப்பன் வண்புகழைக் காவியத்தும்
கூறினனேன் கம்பன் குமரேசா—தேறி
எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு (௭)

108. வாதவூர் அண்ணல் வழுதிசெய்த நன்மைபுனைக்
கோதேன் மறந்தார் குமரேசா—ஓதுங்கால்
நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று. (௮)

109 எள்ளி விராடன் எறிந்தும் தருமனேன்
கொள்ளவில்லை கோபம் குமரேசா—துள்ளிவந்து
கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும் (௯)

110. நன்றியொன்றுக் காகத்தன நல்லுயிரைச் சல்லிய
குன்றமல தந்தான் குமரேசா—குன்றாத [னேன்
எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு (௰)

௰௧-வது செய்ந்நன்றி யறிதல் முற்றிற்று



## 12-ம் அதிகாரம் நடுவு நிலைமை

அஃதாவது ஒருபாற கோடாமல ஒபபநிறகும நிலைமை.

111 பணடோர பசுவுககுட பாலனுநதும எனதததி
கொணடுரைததான சோழன குமரேசா—கொண்ட
தகுதி யெனவொன று நனறே பகுதியாற
பாறபட டொழுகப பெறின் (க)

112 வாணனுபா செலவம வழிவழிபா வநதெதனறும
கோணுமல எனனே குமரேசா—பூணுகச
செபப முடையவன ஆககம சிதைவினறி
யெசசததிற கேமாப புடைதது (உ)

113 பெறறதாய ஆககமுறப பேசிததும கனனனென
குறறமென று நீததான குமரேசா—முறறுக
நனறே தரினு நடுவிகநதாம ஆககததை
அனறே யொழிய விடல (ங)

114 மைநதா தமைககொண்டேன மாநிலததோா காநதாரி
குநதிமனசீா கணடாா குமரேசா—சிநதைதனில
தககாா தகவிலர் எனப தவாவா
ரெசசததால காணப படும (ச)

115 கொறற முறபபகைககும குந்திமைநதன நாடபாாத
குற்றமறச சொனனுன் குமரேசா—உறறுவருங [தேன
கேடும பெருககமும இலலலல நெஞ்சத்துக
கோடாமை சானறோாக கணி (ரு)

116. கோடினன் னெஞ்சம் குருவிச் சுவவுருவன்
கூடினன் கேட்டன் குமரேசா—வாடிக்
கெடுவல்யான் என்ப தறிக தன் னெஞ்சம்
நடுவொரீஇ யல்ல செயின் (௬

117 நாடிழந்தும் இல்லிழந்தும் நல்ல அரிச் சந்திரன் சீர்
கோடாத தென்னே குமரேசா—கோடுங்
கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு (௭

118. கூடாமல் வீமனொடுங் கோனதருமன் நீதியன்றேன
கோடாமல் சொன்னான் குமரேசா—நாடிச் [பால்
சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொரு
கோடாமை சான்றோர்க் கணி (௮

119 மாறில் விகர்ணன்சொல் மன்னவையிற் செப்பமென்றே
கூறினார் ஏனோர் குமரேசா—கூறுகின்ற [ன
சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின் (௯

120. வாணிகஞ்செய் எல்லா மற்றவையும் பேணியறங்
கோணாதே செய்தார் குமரேசா—காணியாய்
வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின் (௰)

௧௨-வது நடுவு நிலைமை முற்றிற்று



## 13-ம் அதிகாரம் அடக்கமுடைமை.

அஃதாவது தீநெறியிற் செல்லாமல் நன்னெறியின்கண்ணே அடங்கி நிற்றலை ஒருவன் உடையனாதல்

121 அன்றிருந்தவன் வாயடங்கி யவ்வுலகத்த றொன்றிருவர்
குன்றினா ரென்னே குமரேசா—என்றும்
அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும் (க)

122 அன்றேனை அனுமான் அடக்கத்தை ஆருயிர்போற்
குன்றுமறக் காத்தான் குமரேசா—என்றுமே
காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை யுயிர்க்கு. (உ)

123 பண்டு சடபரதர் பாரில் அடங்கிநின்றுய்
கொண்டார் உயர்வென் குமரேசா—கொண்ட
செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்
தாற்றின் அடங்கப் பெறின். (ங)

124 இல்வாழ்க்கை யுற்றிருந்தும் என்னுயர்வு பெற்றுநின்றார்
கோல்வேற் சனகர் குமரேசா—நல்ல
நிலையிற் றிரியா தடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது (ச)

125 கண்டு குசேலனைமுன் கண்ணன் பணிந்ததையேன்
கொண்டு புகழ்ந்தார் குமரேசா—உண்டான
எல்லார்க்கும் நன்றாம் பணித லவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து (ரு)

125. புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.

125. புறந்தூங்க ஏன்றோ பொறியடக்கி வானமீகா
குறுமமற சினறுா குமரேசா—உறற
ஒருமையுள் ஆமைபோல ஐநதடக்க லாறறின
எழுமையும ஏமாப புடைத்து (௬)

127 நாவினைக்கா வாமலனறேன நறகவுந்தி யாவிருவா
கூவிநரி யானுா குமரேசா—பூவுலகில
யாகாவா ராயினும நாகாக்க காவாக்கார
சோகாப்பா சொலவிழுக்குப பட்டு (எ)

128 நனறுடைய மாடலனும நனமையெல்லாம ஏனிழநது
குனறினனோ சொல்லால குமரேசா—எனறேனும
ஒனறுனுந தீச்சொற பொருட்பயன உண்டாயின
நனறுகா தாகி விடும (அ)

129 ஆறறுத சீறறததோ டனறகலாருன வனாசன
கூறறுல விதுரன குமரேசா—மாறறுத
தீயினுற சுட்டபுண உள்ளாறும ஆறுதே
நாவினுற சுட்ட வடு (௯)

130 உண்டாம அறங்கெளலலாம உறறுடைய மெயப்புக
கொணடான் தருமன குமரேசா—மண்டு [மேன்
கதங்காத்துக கறறடங்கல ஆறறுவான செவவி
அறமபார்க்கும ஆறறி னுழைந்து (௰)

௰௩-வது அடக்கமுடைமை முற்றிறறு

—∞—

## 14-ம் அதிகாரம் ஒழுக்கமுடைமை

அஃதாவது மக்கள் தந்தமக்குரிய நிலையில் வழுவாமல் ஒழுகுதலையுடையராதல்.

131. ஏனோ தசரதனார் இன்னுயிரை நீத்துந்தன்
கோனொழுக்கங் காத்தார் குமரேசா—மான
ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். (க)

132. பண்டுகசன் ஏனோ பரிந்தும் ஒழுக்கத்தைக்
கொண்டினிது காத்தான் குமரேசா—கொண்ட
பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை. (உ)

133. அன்றோ ரிழுக்கால் அகலிகையுங் கல்லாகிக்
குன்றினள் ஏனோ குமரேசா—என்றும்
ஒழுக்க முடைமை குடிமை யிழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். (ங)

134 பண்டு சுகுமாரன் பார்ப்பானாய் வந்துமேன்
கொண்டான் இழிவைக் குமரேசா—கண்ட
மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும். (ச)

135 உற்ற திருவோ டியாந்தும் சுயோதனனேன்
குற்றமுற்றுத் தாழ்ந்தான் குமரேசா—பற்றும்
அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு (ரு)

136 வீடுமனார் கொண்ட விரத ஒழுக்கத்தைக்
கோடாதே தான் காத்தார் குமரேசா—தேடும்
ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து (சு)

137. வீடாத மேன்மையுற்ற வெண்மதியும் வெம்பழியைக்
கூடினன் பின்பென் குமரேசா—கூடும்
ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி (எ)

138 என்றும் சகுனி யிடும்பையுற்றான் நல்லொழுக்கம்
குன்றியதால் என்னே குமரேசா—குன்றாத
நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கந் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும் (அ)

139. சொல்லவில்லை யென்னேயோர் தீச்சொல்லை யெச்சன
கொல்லவந்தோர் பாலும் குமரேசா—நல்ல [னைக்
ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல் (கூ)

140 கற்றறிந்தும் நற்சமணர் கல்லார்போல் என்மடமைக்
குற்றமுற்றார் முன்னம் குமரேசா—உற்ற
உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார் (௰)

௰௪-வது ஒழுக்கமுடைமை முற்றிற்று

# 15-ம் அதிகாரம் பிறனில் விழையாமை

அஃதாவது பிறனுடைய இல்லாளைக் காம மயக்கத்தால் காதலியாமை.

141 எளிமுனிதாய் மொழிந்தும் என்மெய் மனவிடுமன் முன்
கொள்ளவில்லை பெண்ணைக் குமரேசா — கொள்ளும்
பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்கண் இல் (க)

142 தீதுசெய்தோர் தம்முன்னே தென்னிலங்கை மன்னவ
கோதுமிக வுற்றன் குமரேசா — ஓதும் [னே
அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரின் பேதையார் இல் (உ)

143. தேறுங் குருமனைபால் தீமைசெய்தான் சித்தனே
கூறுபட மாய்ந்தான் குமரேசா — மாறி
விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார் (ங)

144 என்னே அகலிகையால் இந்திரனும் தன்பெருமை
கொன்னே இழந்தான் குமரேசா — அன்றோ
எனைத்துணைய ராயினும் என்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல் (ச)

145 கண்டான் துரோபதையைக் காதலித்தான் கீசகன்பின்
கொண்டான் பழியென் குமரேசா — அண்டல்
எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி (ரு)

146 அன்றொருவன் இல்லிறப்பால் அப்பனைப்புய வெம்பகைத்
கொன்றுபழி கொண்டான் குமரேசா—என்றும் [தக
பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண் (௬)

147 பற்றும் அயோமுகியைப் பற்றின இலக்குவனைக்
குற்றமென்று நீத்தான் குமரேசா—உற்ற
அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன் (௭)

148 பண்டரக்கி வந்துரைத்தும் பாராமல் ஏன் உறுதி
கொண்டான் இராமன் குமரேசா—கண்ட
பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ ஆன்ற ஒழுக்கு (௮)

149. நாடினள்தோள் தோயாமல் நற்றவ மானவரென்
கோடியகன்றார் குமரேசா—தேடும்
நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பிற்
பிறற்குரியாள் தோடோயா தார் (௯)

150 நன்றுசெய்தான் தீமை நயவானோ பெண்ணயந்தேன்
குன்றினன் வாலி குமரேசா—என்றும்
அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று (௰)

௧௫-வது பிறனில் விழையாமை முற்றிற்று.

# 16-ம் அதிகாரம் பொறையுடைமை

அஃதாவது பிறர் செய்த பிழைகளைப் பொறுத்தலை
யுடையராதல்

151 காடிகழ்ந்து துன்புசெய்த கள்ளரையும் ஏன்பொறுத்துக்
கொண்டசய தேவர் குமரேசா—கிண்டி [தார
அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை (க)

152 வள்ளுவர்தம் ஆடை வலித்தான் பிழைபொறுத்துக்
கொள்விலையேன் சொன்னார் குமரேசா—உள்ளம்
பொறுத்தல் இறப்பினை யென்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று. (உ)

153 தூறுசென்ற கண்ணன் துரியோ தனன்செய்த
கோதேன் பொறுத்தான் குமரேசா—யாதொன்றும்
இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. (ங)

154. கொண்ட பொறையுடைமை கோடாமல் ஏன்னொன்றுங்
கொண்டான் தருமன் குமரேசா—கொண்ட
நிறையுடைமை நீங்காமை வேண்டிற்பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும் (ச)

155 கொன்று மழுவோனைக் கொல்லாமல் ஏன்பொறுத்தான்
குன்று இராமன் குமரேசா—கன்றி
ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து (ரு)

156. வெற்றி யருணகிரி வில்லிசெவி கொய்யாதேன்
குற்றம் பொறுத்தார் குமரேசா—பற்றி
ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ். (௬)

157. திண்டோட் பரிசித்து தீங்குசெய்தும் ஏன் இரக்கம்
கொண்டான் சமீகன் குமரேசா—மண்டித்
திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று (௭)

158. காலால் மிதித்தாற்கும் கசியப்ப ரேன்கொடுத்தார்
கோலச் சிவிகை குமரேசா—ஏலும்
மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல் (௮)

159. மாறன் மாமியின்வாய் வன்சொல்லெதிர் ஏன்கொளார்
கூறுமல நோற்றாள் குமரேசா—தேறித்
துறந்தாரிற் றூய்மை யுடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர் (௯)

160. மண்டுபுகழ் மாந்தாதா மாதவரின் மேன்மைமிக்க
கொண்டுநின்றார் முன்னே குமரேசா—உண்டித்தன்
உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரிற் பின். (௰)

௧௬-வது பொறையுடைமை முற்றிற்று

# 17-ம் அதிகாரம் அழுக்காறாமை

அஃதாவது பொறாமையைச் செய்யாமை

161. திணடோ ஞயாவிமன தீய அழுக காறுநெஞசங
கொண்டிலனென் எனறுங குமரேசா—கணட
ஒழுககாறுக கொள்க ஒருவனறன நெஞ்சத்
தழுககா றிலாத இயல்பு. (க)

162. பெறறுள அருங்குணம் பேறு அழுககாறுங
குறறமினமை எனனே குமரேசா—முற்றும
விழுப பேற்றின அஃதொபப தில்லையாா மாட்டும
அழுககாற்றின அன்மை பெறின (உ)

163 பெறறுன நளனுககம எனறுகலி பேணுதேன
குறறமுறறுன வீணை குமரேசா—முறறும
அறனுககம வேண்டாதா னெனபான பிறனுககம
பேணு தழுககறுப பான (௩)

164 சேரன அமைசசரல்ல செயயாமல எனனபு
கூர நினறூா பினபு குமரேசா—யாரும
அழுககாறறின அல்லவை செய்யாா இழுககாறறின
ஏதம படுபாக கறிநது (௪)

165 கேடுபிறா செயயாதேன கேடுறறுள காநதாாி
கோடியதன னெஞசால குமரேசா—கோடும
அழுககா றுடையாாக கதுசாலும ஒனனாா
வழுககியுங கேடின பது (௫)

166. சிறிது தடுத்த சிசுபாலன் சுற்றமோடு
கூறுபட்டுத் தாழ்ந்த குமரேசா — தேறிக்
கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும். (௬)

167. உற்றதிரு வெல்லாம் ஒருங்கிழந்து முஞ்சனென
குற்றமிக வுற்றான் குமரேசா — மற்றவர்மேல்
அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். (௭)

168 அன்றுகஞ்சன் கொண்ட அழுக்காற்றால் தன்திருவென்
குன்றிப் பழிந்தான் குமரேசா — கன்றும்
அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும். (௮)

169. அன்றுசித்தி ராங்கதனை அவ்வியம்செய் தும்வாழ்ந்தான்
குன்றினனோ மன்னன் குமரேசா — என்றேனும்
அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும். (௯)

170. அன்றவிந்தார் நூற்றுவரும் ஐவரென ஆக்கமுற்றுக்
குன்றுமல வாழ்ந்தார் குமரேசா — என்றும்
அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில். (௰)

௧௭-வது அழுக்காறாமை முற்றிற்று.

## 18-ம் அதிகாரம் வெஃகாமை

அஃதாவது பிறர் பொருளைக் கவர்ந்துகொள்ளக் கருதாமை.

171 கொற்றமுற்றக் கட்டியனைக் கோன்பொருளை வெஃகிய
குற்றமுற்று மாய்ந்தான் குமரேசா—முற்றும் [தால்
நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும் (௧)

172 பண்டுபெருஞ் சாத்தன் பழிசெய்ப நாணியொன்றுங்
கொண்டிலனை மீண்டான் குமரேசா—மண்டிப்
படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர் (௨)

173 கொள்ளென்று முன்னேன் கொடுத்ததுமேன் சத்துருக்கன்
கொள்ளவில்லை நாட்டைக் குமரேசா—எள்ளுகின்ற
சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர் (௩)

174 வள்ளுவனார் தள்ளா வறுமையுற்றும் வெஃகியொன்றும்
கொள்ளவில்லை என்னே குமரேசா—மெள்ள
இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர் (௪)

175. மேலாம் அறிவுற்றும் வெஃகிக் கண்ணிழந்து
கோலிழந்தான் என்னே குமரேசா—சாலவே
அஃகி யகன்ற அறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின் (௫)

176. வென்றி மிகுகார்த்த வீரியனோர் ஆவைவெஃகிக்
குன்றினான் என்னே குமரேசா—நன்றும்
அருள்வெஃகி யாற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும் (௬)

177. தள்ளாத தனபதிபொன் தாயத்தார் வௌவியுமேன்
கொள்ளவில்லை இன்பம் குமரேசா—எள்ளளவும்
வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன். (௭)

178. வள்ளலுயர் ஆய்செல்வம் மாறும லேனவளர்ந்து
கொள்ளநின்ற தின்பம் குமரேசா—தள்ளியென்றும்
அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள் (௮)

179. கொள்ள விரும்பாக் குசேலரிடம் செல்வமன்பு
கொள்ளவந்த தென்னே குமரேசா—உள்ள
அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறனறிந் தாங்கே திரு (௯)

180. கண்டாள் பழிவெஃகிக் கைகேசி காகுத்தன்
கொண்டான் விறலென் குமரேசா—மண்டி
இறலீனும் எண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னும் செருக்கு (௰)

௰௮-வது வெஃகாமை முற்றிற்று.



## 19-ம் அதிகாரம் புறங்கூறாமை.

அஃதாவது காணாத இடத்தில் பிறரை யிகழ்ந்து சொல்லாமை.

181. மாறுசெய்தும் கும்பகன்னன் மாணபுறஞ்சொல் யாதுமே
கூறுமென்ன றென்னே குமரேசா—தேறி
அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது. (க)

182 கண்டு நகைத்த கனகவனமன் ஏனோகெடு
கொண்டான் பழித்துக் குமரேசா—கொண்ட
அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை (உ)

183 சீறி யெதிர்வைத்து செத்தான் பவுண்டரகன்
கூறான் புறமேன் குமரேசா—வேறாய்ப்
புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறும் ஆக்கந் தரும் (ங)

184. மாறு வழுதுண்ணும் வஞ்சரெதிர் வெய்யசொன்னோர்
கூறார் புறமேன் குமரேசா—சீறிவந்து
கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல். (ச)

185. கண்டார் அறம்புகன்றும் கண்ணிலலான் தீயனென்ன
கொண்டார்முன் ஐவர் குமரேசா—கொண்ட [றேன்
அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும் (ரு)

186 மீறிப் பழிபுரைத்த வேந்தன் கடோற்கசனால்
கூறப்பட் டானென் குமரேசா—மாறிப்
பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும் (௬)

187. காணிலிரா மன்பிரியக் கைகைதனை யேன்பிரித்தாள்
கூனிபுறங் கூறிக் குமரேசா—தானே
பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர். (௭)

188 வெற்றிமிகு கண்ணனுக்கும் வெய்யதுரி யோதனனென
குற்றமிகச் சொன்னானென் குமரேசா—சுற்றமெனத்
துன்னியார் குற்றமுந் தூற்று மரபினார்
என்னைகொ லேதிலார் மாட்டு. (௮)

189. கூறுஞ் சமிதனை கொடுஞ்சகுனி யேனுலகம்
கூறியழ நின்றான் குமரேசா—கூறும்
அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை. (௯)

190 கண்டவுடன் தன்குற்றம் காதறுக்குந் தீதைவிலவி
கொண்டிலனோ விட்டார் குமரேசா—உண்டான
ஏதிலார் குற்றம்போல் தன்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு (௰)

௧௯-வது புறங்கூறாமை முற்றிற்று

## 20-ம் அதிகாரம் பயனில சொல்லாமை.

அஃதாவது பயனில்லாத சொற்களைச் சொல்லாமை

191. எல்லாரு மெள்ளி யிகழ்ந்தா ரினக்குமணன்
கொல்லென்ற போதேன் குமரேசா—வல்லான்போற்
பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரு மெள்ளப் படும். (க)

192 பற்றித் துகிலுரியு மென்றான் பலர்முன்னே
குற்றமுற்றான் பின்பேன் குமரேசா—உற்ற
பயனில பல்லார்முற் சொல்லல் நயனில
நட்டார்கட் செய்தலிற் றீது (உ)

193. சார்ந்துநின்ற மாயா சனகனையேன் தீயனென்று
கூர்ந்தறிந்தார் சொல்லாற் குமரேசா—ஆர்ந்த
நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை (ங)

194. மாசில்லான் வாயிற்பொய் வார்த்தைவரு விப்பனென்றேன்
கோசிகன்சீர் நீத்தான் குமரேசா—ஆசில்
நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து (ச)

195 உற்றசீர் எல்லாம் ஒருசொல்லா லேணிழந்தான்
கொற்ற நகுடன் குமரேசா—பெற்றபெருஞ்
சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின். (ரு)

196. சீதை இராவணனைச் சீறிப் பதரென்றேன
கோதுபடச் சொன்னாள் குமரேசா—ஏதும்
பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். (௬)

197. மண்டுபுகழ் மூவேந்தர் வன்சொலொன்றைச் சொல்லியன்றே
கொண்டசீர் தீர்ந்தார் குமரேசா—கொண்ட [னா
நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று (௭)

198. மாறொரு சொல்லே மதுரகவி முன்சொன்னார்
கூறாவே றென்னே குமரேசா—தேறி
அரும்பய னாயும் அறிவினார் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல். (௮)

199. அன்றேன இரணியன்செய அல்லலுற்றுஞ் சொல்லல்
குன்றியசொல் ஒன்றுங் குமரேசா—என்றும் [வில்லை
பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர் (௯)

200 சீதைதன்மை சொல்லித்தான் செய்ததையேன் சொல
கோதில அனுமான் குமரேசா—ஏதேனும் [லவில்லை
சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். (௰)

உ௰-வது பயனில சொல்லாமை முற்றிற்று.

# 21-ம் அதிகாரம் தீவினையச்சம்

அஃதாவது தீயவினைகளைச் செய்தற்கு அஞ்சுதல்

201 அன்றசுரர் நின்றார் அமரரென அஞ்சினார்
கொன்றமீன் கண்டகக் குமரேசா—நன்றகன்ற
தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு (௧)

202 அஞ்சாத பாண்டியனும் அஞ்சினனேன் தீயதென்று
கொஞ்சந் தெரிந்து குமரேசா—நஞ்செனவே
தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினும் அஞ்சப் படும் (௨)

203 செற்ற பகைவனுக்குந் தீதுசெய்யார் தேனவிடுத்தார்
கொற்றமிகு மெய்யார் குமரேசா—பெற்ற
அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல் (௩)

204 வெற்றி விசயனுக்கேன் வெம்முகனைக் கேடெண்ணிக்
குற்றமுற்று மாய்ந்தான் குமரேசா—எற்றும்
மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு (௪)

205 உற்ற வறுமை யொழிகவென்று தீதுசெய்தேன்
குற்றமுற்றான் கூலன் குமரேசா—முற்றும்
இலனென்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து (௫)

206. கூடியமானைக் கொன்று கொடுத்தால் பாண்டுமன்னன்
கூடியேன் மாய்ந்தான் குமரேசா — நாடியென்றும்
தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான் (௬)

207. கொன்றுன்முன் சங்கமனைக் கோவலனும் வந்தபின்பும்
துன்றியேன் மாய்ந்தான் குமரேசா — என்றும்
எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும் (௭)

208. பண்டுயர்ந்த காளமுனி பாண்டவர்பாற் செய்ததால்
கொண்டானே கேடு குமரேசா — மண்டுகின்ற
தீயவை செய்தார் கெடுதல் நிழறன்னை
வீயா தடியுறைந் தற்று. (௮)

209. மானாகித் தீவினைசெய் மாரீசன் என்மாய்ந்தான்
கோனால் வருந்திக் குமரேசா — ஆனமல
தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால் (௯)

210 பண்டு துயரம் பலசெய்தும் பொன்னவனைச் சேய
கொண்டிலன்கே டென்னே குமரேசா — கண்டு
அருங்கேடன் என்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின் (௰)

௨௧-வது தீவினையச்சம் முற்றிற்று.

# 22-ம் அதிகாரம் ஒப்புரவறிதல்

அஃதாவது உலக இயல்புக்கும் தன் இயல்புக்கும் ஒப்பமும் நலங்களை உய்த்துணர்ந்து உதவி செய்தல்

211 வெறுமென்றும் வேண்டாமல் மெய்யுறச் செய்ததனாற்
கூறுதேன் சென்றான் குமரேசா—வேறுக்க
கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு (க)

212 நாடிவைத்த செல்வமெல்லாம் ஏற்பார்க்குத் தக்கார்க்குக்
கூட்டினனென்ன பாரி குமரேசா—நாட்டமுடன் [கும
தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு (உ)

213 தெள்ளுபுகழ் ஆபுத்திரனொப்புரவோனென்றே
கொள்ளமகிழ்ந் தானென்ன குமரேசா—எள்ளாத
புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற. (ந)

214 என்னேநல் வேங்கடத்தான் இன்பமுற முன்னவனென்
கொன்னே இழிந்தான் குமரேசா—உன்னியே
ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும் (ச)

215 வள்ளலிரா மன்றிருவால் வையமெல்லாம் பேருவகை
கொள்ளநின்ற தென்னே குமரேசா—எள்ளாத
ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு (ரு)

216 கோட்டி முதலியார் கொண்ட செல்வம் எல்லார்க்கும்
கூட்டியதேன் இன்பம் குமரேசா—நாட்டில்
பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கட் படின் (௬)

217 கற்றோர் புகழ்ச்சித்தக் காதிசெல்வத் தாற்பலரைத்
துற்றுமற்று வாழ்ந்தார் குமரேசா—முற்றும்
மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கட் படின் (௭)

218 பண்டுசெல்வந் தேய்ந்தும் பரிந்தளிப்பேன் என்றர்த்
கொண்டெழுந்தார் என்னே குமரேசா—கொண்ட
இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர் (௮)

219 குன்று இளையான் குடிமாறர் செய்நீர்மை
குன்றநொந்தார் என்னே குமரேசா—என்றும்
நயனுடையான் நல்கூர்ந்தா னாதல் செய்யுநீர
செய்யா தமைகலா வாறு (௯)

220 வெள்ளி கெடுவா யெனவுரைத்தும் மாவலியேன்
கொள்ளென்று தந்தான் குமரேசா—தள்ளாது
ஒப்புரவி னால்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து (௰)

௨௨-வது ஒப்புரவறிதல் முற்றிற்று.

## 23-ம் அதிகாரம் ஈகை

அஃதாவது இல்லையென்று இரந்தார் எவர்க்கும்
இல்லை என்னாது கொடுத்தல்

221 வள்ளலுயர் பேகன் வறியார்க்கே யீந்தும்பில்
கொள்ளவமென் தந்தான் குமரேசா — தள்ளாது
வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து (க)

222 வள்ளலாங் கன்னனன்று வந்தகண்ணன் பாலொன்றுங்
கொள்ளாதேன் ஈந்தான் குமரேசா — உள்ளபடி
நல்லா றெனினுங் கொளறீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று (உ)

223 தெள்ளு குமணனென்றும் செப்பாமல் தன்தலையைக்
கொள்ளென்முன் தந்தான் குமரேசா — என்றும்
இலனென்னும் எவ்வம் உரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள (ங)

224 ஏனோ நளன்றனயம் எய்தினன் வானவர்தங்
கோனிரந்த போது குமரேசா — தானுக்
இன்னா திரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகங் காணும் அளவு (ச)

225 அம்பரீடன் வலிமைக் காற்றுமல் கோபமுனி
கும்பிட்டே வீழ்ந்தான் குமரேசா — அம்புவியில்
ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின் (ரு)

## 24-ம் அதிகாரம் புகழ்

அஃதாவது தனது குணஞ் செயல்களான் உலகம் என்றும் உவந்து போற்றும்படி ஒருவனுக்கு அமைந்து நிற்குங் கீர்த்தி

231 திண்டோள் இபற்பகைதன் தேவியையும் ஈந்தின்று
கொண்டார் இசையைக் குமரேசா—தண்டாமல்
ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு (க)

232 பாரிகன்ன னாதியரைப் பல்லோரும் பேரன்பு
கூரவுரைப் பானேன் குமரேசா—பாரில்
உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க்கொன்
றீவார்மேல் நிற்கும் புகழ் (உ)

233 என்றும் சிபிகன்னன் இன்புகழே நின்றிலங்கு
குன்றியவேன் எல்லாம் குமரேசா—நன்றாக
ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றில் (ங)

234 வானுலகோர் போற்றுவதோர் வண்புறவை வாணிலுள
கோனையும்போற் றுமல் குமரேசா—மான [ளார்
நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு. (ச)

235. தண்டார் அரசன் ததீசிபோல் மெய்ப்புகழைக்
கொண்டிலரேன் மற்றோர் குமரேசா—கொண்டாடும்
நத்தம்போற் கேடும் உளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது (ரு)

236. பூருவென தோன்றிப் புகழ்கொண்டான் ஏனிருவர்
கூரிகழ்வால் நொந்தார் குமரேசா—பாருலகில்
தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. (௬)

237 ஓதுபுகழ் கொள்ளா உலகனென தன்னையிகழ்
கோதிலரை நொந்தான் குமரேசா—ஏதும்
புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன் (௭)

238 பன்னிகொண்டான் செல்வமெல்லாம் பல்லோர்களும் நந்திசை
கொள்ளைகொண்டான் என்னே குமரேசா—தள்ளும் [யைக்
வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின் (௮)

239 பண்டைவளங் குன்றியதிப் பாரென்ன நாகனைமுன்
கொண்டிருந்த போது குமரேசா—கொண்ட
வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம். (௯)

240 மண்டுபுகழ் நன்னன்சேய வாழ்ந்துயர்ந்தான் நன்னனிகழ்
கொண்டிழிந்தான் என்னே குமரேசா—மண்டும்
வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர் (௰)

உ௪-வது புகழ் முற்றிற்று.

—ooOoo—

## துறவறவியல்

## 25-ம் அதிகாரம் அருளுடைமை.

அஃதாவது எல்லாவுயிர்களிடத்தும் இயல்பாகவே
செல்லுகின்ற கருணை.

241. கொண்ட உடம்புங் கொடுத்துமேன் சீமூதன்
கொண்டான் அருளைக் குமரேசா—கண்ட
அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள (௧)

242 ஏனோ அருளொன்றே இன்றுணையாக் கொண்டுநின்
கோனான புத்தர் குமரேசா—தானாக [றார்
நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினும் அஃதே துணை (௨)

243 நாடொரு நாட்கொண்ட நல்லநளால் துன்பகன்று
கூடினனின் பென்னே குமரேசா—தேடும்
அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல் (௩)

244 அன்றுவெய்ய நஞ்சையுண்டும் அல்லலின்றிப் பென்வச
குன்றுறுஇன் புற்றா குமரேசா—என்றுமே [வா
மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை. (௪)

245 கண்ட திருக்குறிப்பார் கலவின்மேல் பாய்ந்துமல்லல்
கொண்டிலர் முன் என்னே குமரேசா—மண்டுகின்ற
அல்லல் அருளாள்வார்க் கில்லை வளிவழங்கும்
மல்லன்மா ஞாலங் கரி. (௫)

246. அனறேன் சமணர் அருணீங்கி யலலசெயதார
குனறினர் பினபேன குமரேசா—எனறும
பொருணீங்கிப் பொசசாநதா ரெனபா அருணீங்கி
அலலவை செயதொழுகு வார. (௬)

247. அனறருளில் காமநதன அவவுலகில இனபமினறிக
குனறிநொநதான எனனே குமரேசா—நனறும
அருளில்லாாக கவவுலக மிலலை பொருளில்லாாக
கிவவுலக மிலலாகி யாஙகு (௭)

248. அறறபொருள் பூததாாபின ஐவரநத நூறறுவரேன
குறறமுறறே தாழந்தார குமரேசா—உறற
பொருளறறாா பூபப ராாகால அருளறறாா
அறறாாமற றாத லரிது. (௮)

249. அன்றசதா னீகன அறஞசெயதும எனிமுநது
குனறினன இனபம குமரேசா—எனறும
தெருளாதான் மெய்பபொருள கணடறறல தேரின
அருளாதான செய்யும அறம (௯)

250. தாசரதி முன்பரசு ராமன தனைநினைநது
கூசினன் பினபேன் குமரேசா—கூசும
வலியாாமுற றனனை நினைகக தான தனனின
மெலியாாமேற் செலலு மிடதது (௰)

௨௫-வது அருளுடைமை முற்றிற்று.



## 26-ம் அதிகாரம் புலான் மறுத்தல்.

### அஃதாவது ஊன் உண்ணாமை

251 அன்றேன் அருளின்றி ஆதனென்பான் அன்றிலொன்
கொன்று சிந்தைத்தான் குமரேசா—நன்றுக்க [றைக
தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூன் உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள் (௧)

252 அன்றேன் உதிரன் அருளின்றி யந்தணனைக்
கொன்றானைத் தின்றான் குமரேசா—என்றும்
பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு

253 வில்வலன்வா தாவியென்பார் மெய்த்தவர்க்குங் கேடெண்ணிக்
கொலவினையே செய்தார் குமரேசா—கொல்லும்
படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்கா தொன்றன்
உடல்சுவை யுண்டார் மனம் (௩)

254 உற்ற அரிவிசயர் ஊன்றின்றல் பாவமென்றே
கொற்றவைமுன் சொன்னார் குமரேசா—பற்றும்
அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல் (௪)

255 பல்லோரை வேதத்திரத்தில் பாவிகன் தின்றேனோ
கொல்லுநர் காழ்ந்தான் குமரேசா—தொல்லுலகில்
உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு (௫)

256. வில்லாமல் கூரனுககேன மீனசுமநது கொண்டுதநதார்
கொலலாத தேவா குமரேசா—எலலாந
தினறபொருட்டாற கொல்லா துலகெனின் யாரும
விலைபபொருட்டால ஊனதருவார இல. (௬)

257. ஊனென றுணர்நத வுடனவெறுததேன உண்ணாவிலலை
கோன்குமர தேவா குமரேசா—தானுக
உணணாமை வேண்டும புலாஅல பிறிதொன்றன
புண்ண துணாவாரப் பெறின (௭)

258 ஊனென றுணாநத உடனவசிட்டா உண்ணுதேன
கோனைச் சினந்தார் குமரேசா—ஏனச
செயிரிற றலைபபிரிந்த காட்சியார உணணார
உயிரிற றலைபபிரிநத ஊன. (௮)

259 வெற்றிமிகு பிமபசரன வேளவியினை ஏனதடுததுக
குற்றமெனறார் புததா குமரேசா—உறற
அவிசொரிந் தாயிரம வேட்டலின ஒன்றன
உயிரசெகுத துண்ணாமை நனறு (௯)

260. மண்டுபுகழ் நநதனார வானமீகா ஏனுலகம
கொணடுதொழ நினறார குமரேசா—கணடதொனறும
கொலலான புலாலை மறுததானைக கைகூபபி
யெலலா வுயிருந தொழும (௰)

உசு-வது, புலால் மறுததல முறறிறறு

# 27-ம் அதிகாரம் தவம்

அஃதாவது மனத்தைப் புலன்வழிச் செலுத்தாது நலனுற
நிறுத்தித் தன்னுயிர்க்கு உறுதுயர் தனி நின்று
பொறுத்துப் பிறவுயிர்களைப் பேணும் பெருநலம்

261 உண்டி துறந்தார் உயிர்க்கிரக்கம் கண்ணுவரேன்
கொண்டு புரிந்தார் குமரேசா—மண்டியென்றும்
உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு (க)

262 வெம்பித் தவம்புரிந்தும் மெய்ப்பயனை யேனிழந்தான்
கும்ப கருணன் குமரேசா—நம்புந்
தவமுந் தவமுடையார்க் காகும் அவமதனை
யஃதிலார் மேற்கொள் வது, (உ)

263 ஏனோ தவம்புரியா தில்லிருந்தார் சேர்ந்தனரோ
கோனுன சோமா குமரேசா—தானே
துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம் (௩)

264 எசிச் சிலரை யிழித்தார் திரிசங்கைக்
கோசிகரேன் காத்தார் குமரேசா—கூசாமல்
ஒன்னாத் தெறலும் உவந்தாரை யாக்கலும்
எண்ணிற் றவத்தான் வரும். (௪)

265 பாலப் பருவத்தே பண்டுதவம் ஏன்முயன்றான்
கோலவுப மன்யு குமரேசா—சீலமுடன்
வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும் (ரு)

266 பண்டுபலர் சிறந்தபம பறறச சவுனகரேன
கொண்டுதவஞ் செயதார குமரேசா—மண்டு
தவஞ்செயவார தங்கருமம செய்வாரமற றலலார
அவஞ்செய்வார ஆசையுட படடு (௬)

267. மண்டு புகழ்ச்சீதை வாகீசர் வாசகர்சீர
கொண்டனரேன துனபால குமரேசா—மண்டிச
சுடச்சுடரும பொனபோல ஒளிவிடுந துனபம
சுடசசுட நோறகிற பவாககு. (௭)

268. மண்டுபுகழ நந்தியையேன மனனுயிரெல லாமுவநது
கொண்டுதொழு கினற குமரேசா—கொண்டுநினற
தனனுயிர தானறப பெறறானை யேனைய
மன்னுயி ரெலலாந தொழும (௮)

269. சாற்றுபுகழ மார்க்கணடர் சாருஞ் சுவேதரேன
கூற்றினையும வென்றார குமரேசா—சீறறமிகு
கூறறங குதிததலும் கைகூடும நோற்றலின்
ஆற்றல தலைபபட டவாககு (௯)

270. பண்டு பலரிலராய்ப பாடழிந்தார் பாணனேனை
கொண்டான் திருவைக குமரேசா—மண்டி
இலாபல ராகிய காரணம நோறபார
சிலாபலர் நோலாதவர். (௰)

உஎ-வது தவம முற்றிற்று.

## 28-ம் அதிகாரம் கூடாவொழுக்கம்.

அஃதாவது தவததோடு பொருநதாத ஒழுக்கம்.

271. பண்டுமுதத நாதன படிறறொழுககை எலலாரும
கொணடிழிததார எனனே குமரேசா—மணடுகினற
வஞ்ச மனததான படிறறொழுககம பூதஙகள
ஐநதும அகத்தே நகும (க)

272 குனறு வயாதோறறம கொணடும அதிகூரன
குனறினன எனனே குமரேசா—என்றேனும
வானுயா தோறறம எவனசெயயும் தனனெஞசம
தானறி குறறப படின. (உ)

273 மாதவனபோல இந்திரனென வல்லுருவந தாஙகிவநது
கோது புரிநதான குமரேசா—எதும
வலியில நிலைமையான வலலுருவம பெறறம
புலியின தோல போரததுமேயந தறறு (௩)

274 பணடுதவ வேடமுறறும பாாததன சுபததிரையைக
கொணடகனறன எனனே குமரேசா—கொணட
தவமறைநத தலலவை செயதல புதனமறைநது
வேடடுவன புடசிமிழ்தத தற்று

275 பறறறறோம போனறு படிவமுறற விலவலனென
குறறமுறறு மாயநதான குமரேசா—முறறவே
பறறறறேம எனபாா படிறறொழுககம எறறெறறெனன
ஏதம பலவுந தரும (ரு)

276. மாதவனபோல வநதமதன மாணபொருளெலலாஙகவர்ந்தேன்
கோதுசெய்து சென்றுன குமரேசா—யாதொனறும
நெஞ்சிற் றுறவாா துறந்தாாபோல வஞ்சித்து
வாழ்வாாின வனகணோா இல். (சு)

277. சிதைபால மாதவனபோல சென்றுன இராவணனுட
கோதுகொணடும எனனே குமரேசா—ஓதும
புறங்குனறி கண்டனைய ரேனும அகங்குனறி
மூககிற கரியாா உடைத்து. (எ)

278. பண்டொருவன ஆசான பணமபறிககப பொய்வேடம
கொண்டுவந்தான எனனே குமரேசா—கொண்ட
மனததது மாசாக மாணடாாநீ ராடி
மறைந்தொழுகு மாநதா பலா (அ)

279. கண்டமான் செவவிதெனற காருத்தன பினசெயலாற
கொணடனனதீ தெனறேன குமரேசா—மணடுங
கணைகொடிதி யாழ்கோடு செவவிதாங கனன
வினைபடு பாலாற கொளல (கூ)

280. பண்டுதவ வேடமொனறும பறறா சகதேசர்
கொண்டார் உயாவேன குமரேசா—கொணட
மழித்தலும் நீட்டலும் வேணடா வுலகம
பழித்த தொழித்து விடின (ய)

உஅ-வது கூடாவொழுக்கம முறறிறறு

—∘∘—

## 29-ம் அதிகாரம் கள்ளாமை

அஃதாவது பிறர்க்குரிய யாதொரு பொருளையும் அவரறியா வகை கவர்ந்து கொள்ளக் கருதாமை.

281 கற்ற கலையின் களவாலும் கன்னனிகழ்
குற்றமுற்றான் என்னே குமரேசா—எற்றும்
எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு. (க)

282 பண்டுமலர் கள்ளத்தால் பற்றிய பாராந்தகனும்
கொண்டனன்தீ தென்னே குமரேசா—கொண்டுநின்ற
உள்ளத்தால் உள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கொள்வேம் எனல் (உ)

283 அன்று களவால் அடைந்தவெல்லாம் எனிழந்து
குன்றினார் சாரர் குமரேசா—என்றும்
களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்
தாவது போலக் கெடும் (ங)

284 மாசில் மணிக்களவால் மந்திரிதன் இன்பம்போய்க்
கூசிநொந்தான் என்னே குமரேசா—நீசக்
களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும் (ச)

285 கண்டார்பொன் மூவர் கருணையின்றி யேனிருவர்
கொண்டோடி மாய்ந்தார் குமரேசா—மண்டும்
அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல். (ரு)

286. மாசில வசவரினமுன வநதும களவெழுவா
கூசாதேன் செயதார் குமரேசா—பேசும
அளவினகண் நினறொழுக லாறறா களவினகட
கனறிய காத லவா (௬)

287 அன்றேன களவை அடியவாசெய யாரெனறார்
குனறாத சேரா குமரேசா—எனறும
களவெனனும காரறி வாணமை அளவெனனும
ஆறறல் புரிநதாாகண இல (௭)

288. திண்டோட சயிநதவனறன தீரநெஞ்சிற புனகரவுங
கொண்டுநினறுன எனனே குமரேசா—உணடாம
அளவறிநதா நெஞசத தறமபோல நிறகும
களவறிநதா நெஞசிற கரவு (௮)

289. அனறு களவால அமிழநதுணடாா எனுடனே
குனறி யழிநதாா குமரேசா—என்றும
அளவலல செய்தாஙகே வீவர் களவலல
மறறைய தேறறா தவா (௯)

290 பண்டேன் வசுககள பசுககளவால் தமமுடமபும
கொண்டனவும தீரநதார் குமரேசா—அண்டிநினறு
களவாாக்குத் தளளும உயிாநிலை கள்ளாாககுத
தளளாது புததே ளுலகு. (௰)

உகூ-வது களளாமை முறறிறறு



## 30-ம் அதிகாரம் வாய்மை

அஃதாவது உண்மையினது தன்மை.

291 உள்ளதே சொன்னனை உயர்தருமன் பொய்யினென்று
கொள்ளநின்றான் என்னே குமரேசா—உள்ளபடி
வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல். (க)

292 மாதா கலைக்கோட்டு மாமுனிபால் பொய்யுரைத்தும்
கோதடையா ரென்னே குமரேசா—தீதுடைய
பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின் (உ)

293. வேதாவுந் தாழையுமுன் வெய்யதொரு பொய்புகன்றேன்
கோதடைந்து நொந்தார் குமரேசா—ஏதேனும்
தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும் (ங)

294 வள்ளலிச் சந்திரனை வையத்தா ருள்ளமெல்லாங்
கொள்ளநின்றான் இன்றுங் குமரேசா—எள்ளளவும்
உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன் (ச)

295 பண்டு மனமபொருந்தப் பாஞ்சாலி மெய்புகன்று
கொண்டாள்சீர் என்னே குமரேசா—உண்டாம்
மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை (ரு)

296 போத உதத்தியனென பொய்யாமை பூண்டதனல
கோதிலறங் கொண்டான குமரேசா—தீதகன்ற
பொய்யாமை யனன புகழிலலை யெய்யாமை
யெலலா அறமுந் தரும. (சு)

297. ஓரறமும செய்யான உயாநதான்பொய் யாமையொன
கோரனென்பான ஏனனே குமரேசா—சீருடைய[ருல்
பொய்யாமை பொய்யாமை யாறறின் அறமபிற
செய்யாமை செய்யாமை நனறு. (எ)

298. மண்டு புகழுபபரதன மாசினமை கண்டறிநதாா
கொண்டமெயயால ஏனனே குமரேசா—கொணட
புறந்தூயமை நீரான அமையும அகநதூய்மை
வாய்மையாற் காணப் படும (அ)

299. வென்றித் தசரதனுர் மெயககாமன் மெயயினையேன்
குன்றுமற் கொண்டார் குமரேசா—குனறுத
எலலா விளக்கும விளககலல சானறோாககுப
பொய்யா விளககே விளக்கு. (கூ)

300. மாறில சகாதேவன வாய்மையினை யனனையெனறு
கூறினன் என்னே குமரேசா—தேறிநினறு
யாமெய்யாக கண்டவற்றுள் இலலை யெனைத்தொனறும
வாய்மையின நலல பிற (ய)

௩0-வது வாய்மை முற்றிறறு



# 31-ம் அதிகாரம் வெகுளாமை

## அஃதாவது சினத்தைச் செய்யாமை.

301. தெள்ளுபுகழ் அல்லமனூர் செல்லிடத்தும் வெஞ்சினத்தைக்
கொள்ளாத தென்னே குமரேசா—தள்ளாமற்
செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கினென் காவாக்கா லென் (க)

302. செல்லாச் சினத்திழிந்தார் செல்லிடத்தும் கோசிகனே
கொல்லுதலே செய்தார் குமரேசா—பல்லிடத்தும்
செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனிற் றீய பிற. (உ)

303. தள்ளா வெகுளியினைச் சாந்தலிங்கர் யார்மாட்டும்
கொள்ளாத தென்னே குமரேசா—தள்ளி
மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்தல் அதனான் வரும். (ங)

304 தீதுபகை யேதுமில்லாச் சித்தரா மன்சினத்தாற்
கோதடைந்தான் என்னே குமரேசா—போதும்
நகையும் உவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையும் உளவோ பிற (ச)

305. திண்டோள் இரணியன்றன் சேயமேற் சினந்ததனால்
கொண்டான் அழிவென் குமரேசா—கொண்டாடும்
தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம் (ரு)

306. வெற்றித் திரிசங்கென வெஞ்சினத்தால் தன் குருவைக்
குற்றமுறத் தீர்ந்தான் குமரேசா—உற்ற
சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும் (௬)

307 கொண்டார் சினம்பொருளாகக் கொங்கணர்பின் வாசுகி
கொண்டாரே கேடு குமரேசா—மண்டு [யாற
சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று (எ)

308. எள்ளித் துயர்செய்தும் ஏனோ சிவஞானர்
கொள்ளவில்லை கோபம் குமரேசா—தள்ளி
இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. (அ)

309. பண்டு வெகுளாப் பரதத்துவரே உள்ளியதைக்
கொண்டார் உடனே குமரேசா—கொண்டாடி
உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின். (௯)

310 திண்டோட் சகரர் சினந்திறந்தார் அஞ்சுமான்
கொண்டான் உயர்வென குமரேசா—மண்டி
இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை. (௰)

௩௧-வது வெகுளாமை முற்றிற்று.

# 32-ம் அதிகாரம் இன்னா செய்யாமை

அஃதாவது துன்பமான செயல்களைப் பிறவுயிர்கட்கு எவ்வகையானுஞ் செய்யாமை

311 உறறமுனனோனை இனனா வுறுவனென எனினாங்கோ
குறறமற நீததாா குமரேசா—முறறும
சிறபபீனும செலவம பெறினும பிறாககினனா
செயயாமை மாசறறா கோள (௧)

312 செறறஙகொணடினனாமுன செயததாககும செயதில
கொறறங குடியாா குமரேசா—முறறும [சேன
கறுததினனா செயதவக கணணும மறுததினனா
செயயாமை மாசறறா கோள (௨)

313 கிணடோள நிமிவசிடடா சீறியினனா செயதுதுனபம
கொண்டாாபின எனனே குமரேசா—பணடொனறும
செயயாமற செறறாாககும இனனாத செயதபின
உயயா விழுமந தரும (௩)

314 பண்டு சுயோதனனைப பாணடவரேன் கடடவிழததுக
கொண்டுவநது விடடாா குமரேசா—மணடிவநது
இனனா செயதாரை யொறுததல அவாநாண
நனனயஞ செயது விடல (௪)

315 திணடோட பவணனை சிறறுயிாநோப கொணடா
கொணடான துபம குமரேசா—கொணட [லும
அறிவினை ஆருவ துணடோ பிறிதினோய
தநநோயபோல போறறாக கடை (௫)

316 பற்றியகை அன்னம் படுத்துபாகன் கேட்டுடனே
கொற்றநளன் விட்டான் குமரேசா — எற்றேனும்
இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல் (௬)

317 நந்தும் உயிரென்றேன நாணிக் குசேலர்முன்
தந்தி நடந்தார் குமரேசா — முந்தும்
எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானும்
மாணாசெய் யாமை தலை (௭)

318 மண்டுதுயர் தானறிந்தும் மாரித்தன் எனபிறர்க்குக்
கொண்டுசெய்தான் இன்னா குமரேசா — கொண்டின்ற
தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல் (௮)

319 கூடலசோ கோவலனைக் கொன்றோன் இராகுலனபின்
கூடினார் துன்பேன குமரேசா — நாடிப்
பிறர்க்கின்னா முற்பகற் செய்யின் தமக்கின்னா
பிற்பகற் றாமே வரும் (௯)

320- வண்டுகட்கு நோய்செய்த மாண்டவியர் பின்கொடுநோய்
கொண்டுநொந்தார் என்னே குமரேசா — மண்டிவரும்
நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர் (௰)

௩௨-வது இன்னா செய்யாமை முற்றிற்று



## 33-ம் அதிகாரம் கொல்லாமை

அஃதாவது யாதோர் உயிரையும் எவ்வகையானும்
கொல்லுதலைச் செய்யாமை

321 கொன்றிழந்த வேடன்பின் கொல்லாமை யாலுபாந்
குன்றுஇன் புற்றன் குமரேசா—என்றும் [தேன்
அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும் (க)

322 தண்டார் இயக்கோட்டன் சத்தன் பகுத்துண்டு
கொண்டார் மகிழ்வென் குமரேசா—கொண்ட
பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாந் தலை (உ)

323 கண்ட பசுவொன்றைக் காப்பாற்ற ஆமகனும்
கொண்டான்பொய் என்னே குமரேசா—கண்டிந்தால்
ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று (௩)

324 நாடி மருள்சங்கர் நல்லதென்று கொல்லாமை
கூடினரா என்னே குமரேசா—தேடியென்றும்
நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழும் நெறி (௪)

325 பண்டு துறந்தார் பலருள்ளும் புத்தரேன்
கொண்டார் உயர்வைக் குமரேசா—கொண்ட
நிலையஞ்சி நீத்தாருள் எல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை (௫)

326. கொல்லாத நாரையினைக் கூரருள்சேர் நாகனையேன்
கொல்லவில்லை கூற்றம் குமரேசா—நல்லதென்று [மேற்
கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்
செல்லா துயிருண்ணுங் கூற்று (௬)

327. நீதிமன்னன் சேயுயிரை நீக்கவஞ்சி யன்மைச்சன்
கோதிலுயிர் நீத்தான் குமரேசா—மோதிவந்து
தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. (௭)

328 கொன்றுசெய்யும் வேள்வி கொடிதென்றே தம்பமு
குன்ற வுரைத்தார் குமரேசா—என்றுமே [னி
நன்றாகும் ஆக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கங் கடை (௮)

329. பண்டு பராசரதம் பாலரையும் ஈனரென்றேன்
கொண்டார் கொலையால் குமரேசா—கொண்ட
கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து. (௯)

330. பண்டு கவந்தன் பழியுடம்பும் தீவாழ்வும்
கொண்டுழந்தா னென்னே குமரேசா—கொண்ட
உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர் (௰)

௩௩-வது கொல்லாமை முற்றிற்று.



## 34-ம் அதிகாரம் நிலையாமை

### அஃதாவது தோற்றமுடையன யாவும் நிலையா என்னும் உண்மை

331. கொண்டவுடல் நிற்குமென்ற கோரக்கர் சீரழந்து
கொண்டார் இழிவேன் குமரேசா—கண்டறிந்தும்
நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை (௧)

332. வென்றிமிகு சூர்முதலோர் மேலான செல்வமெல்லாம்
குன்றியேன் போன குமரேசா—குன்றுத
கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று (௨)

333. தண்டாக்கலயனார் தாவிலிறப்பும் ஆங்கறமே
கொண்டுசெய்தார் என்னே குமரேசா—மண்டியென
அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால் [றும
அற்குப ஆங்கே செயல் (௩)

334. மாசில உரோமமுனி வாழ்நாள் நனிபெற்றும்
கூசினரேன் வாழ்க குமரேசா—நேசமுறும்
நாளென ஒன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின் (௪)

335. மண்டு புகழ்க்கட்டு வாங்கன் விரைந்தேனோ
கொண்டுசெய்தான் நன்மை குமரேசா—கொண்டாடும்
நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும் (௫)

336 பண்டு மணமகனைப் பதினியைக் கைப்பிடித்தான்
கொண்டனனே மாண்டான் குமரேசா—கண்ட
நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு. (௬)

337. கோடி கருதிக் குவித்தான் சயத்திரதன்
கூடினனோ சாவேன் குமரேசா—கூடி
ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியும் அல்ல பல. (௭)

338 கூடிவந்த தன்மனைவி கொண்டவுயிர் காணுதேன்
கூடுமட்டுங் கண்டான் குமரேசா—நாடுங்
குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு (௮)

339 அன்றிறந்த சத்தியவான் அவ்விருத்தை என்பிறந்து
குன்றெழுந்தார் குமரேசா—நன்று
உறங்கு வதுபோலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு (௯)

340. திண்டோட சசித்துவசன் செய்யவுயிர் பலவுடம்பு
கொண்டலைந்த தென்னே குமரேசா—கொண்டுநிற்கும்
புக்கில் அமைந்தின்று கொல்லோ வுடம்பினுள்
துச்சி லிருந்த வுயிர்க்கு (௰)

௩௪-வது நிலையாமை முற்றிற்று

## 35-ம் அதிகாரம் துறவு.

அஃதாவது உடல் முதல் உலகிலுள்ள எல்லாப் பொருள்களின் மேலும் உளதாய பற்றுக்களை அறவே விடுதல்.

341 பெற்றசெல்வம் எல்லாம் பிருகாதன் என்துறந்து
குற்றமற நின்றான் குமரேசா—உற்றுநிற்கே
யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன் (க)

342 பண்டேன் இளமைப் பருவத்தே சங்கரமேற்
கொண்டார் துறவைக் குமரேசா—மண்டுநலம்
வேண்டி னுண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல (உ)

343 வெற்றிமிகு சீவகனேன் மேவியவெல் லாமொருங்கே
குற்றமென விட்டான் குமரேசா—முற்றும்
அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லாம் ஒருங்கு (ங)

344 ஓராய உடைமைக்கும் ஓங்குபுகழ்ப் பத்ரகிரி
கூடாரோயேன் கொண்டார் குமரேசா—தேரின்
இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து (ச)

345 பூவணையும் பொற்கலனும் போக்கியுயர் பட்டணத்தார்
கோவணமேன் கொண்டார் குமரேசா— பூவுலகில்
மற்றும் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க் குடம்பும் மிகை (ரு)

346. எனே அயனுலகும எண்ணுா சரபங்கர்
கோனுலகே புககாா குமரேசா—ஞானமுற
யானெனன தெனனுஞ் செருககறுபபான வானோாக
குபாநத வுலகம புகும (௬)

357 பண்டு சவுபரியும பறறென்று பறறியதால
கொணடானே துன்பம குமரேசா—மணடியெனறும
பறறி விடாஅ இடுமபைகள் பறறினைப
பற்றி விடாஅ தவர்க்கு (௭)

348 சிறறம பலர்முத்தி சோநதாா சிவசருமர்
சுறறமுறறுா என்னே குமரேசா—முறறத
தலைபபடடாா தீரத துறநதார் மயஙகி
வலைபபடடாா மறறை யவா. (௮)

349. உற்றபறறை முறறும ஒழிததமணி மேகலையென
குறறமிலவீ டுறறுள குமரேசா—உறறுநின்ற
பற்றற்ற கண்ணே பிறபபறுக்கும் மறறு
நிலையாமை காணப படும. (௯)

350 பறறுகனற காரைககாற பததினியேன் பறறினறுா
குற்றமற்றுன் பற்றைக குமரேசா—முற்றுகப
பற்றுக பறறற்றுன பறறினை யபபறறைப
பற்றுக பறறு விடற்கு (௰)

௩௫-வது துறவு முற்றிற்று



## 36-ம் அதிகாரம் மெய்யுணர்தல்.

அஃதாவது மெயபபொருளியல்பை மெய்யாக உணர்தல

351. தண்டாரச சலபனூ தககனூ புனபிறபபென
கொண்டார மருளால குமரேசா—கண்ட
பொருளலல வறறைப பொருளென றுணரும
மருளானாம மாணாப பிறபபு (க)

352 கண்டமபல நீஙகியபின காசிபரென பேரினபம
கொண்டவராய் நினறார குமரேசா—மணடும
இருணீஙகி இனபம பயக்கும மருணீஙகி
மாசறு காடசி யவர்க்கு. (உ)

353 மாறில கருவூரா வானததின சேரலலாம
கூறிநினறார எனனே குமரேசா—ஆறத
ஐயததின நீஙகித தெளிநதாரககு வையததின
வானம நணிய துடைதது (ந)

354 செனறுணாநதும மெய்கண்ட தேவரெகா நநதியார
குனறிநினறார எனனே குமரேசா—நனறுக
ஐயுணர வெயதியக கண்ணும பயமினறே
மெயயுணர விலலா தவாககு (ச)

355 பண்டுகணணன மெயவடிவே பாாததுச் சகதேவா
கொண்டுணாநதா என்னே குமரேசா—கணடவற்றுள
எப்பொருள எததனமைதத தாயினும அபபொருள
மெயபபொருள காண்ப தறிவு (ரு)

356. கண்டார்முன் மெய்ப்பொருளைக் கற்ற மணிவாசகர்பின்
கொண்டாரீ தென்னே குமரேசா—மண்டருளால்
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி (௬)

357. திண்டோட் சிகித்துவசன் சிங்கவன்மன் உள்ளுணர்ந்து
கொண்டபிறப் பற்றார் குமரேசா—தண்டாமல் [தேன்
ஓர்த்துள்ளம் உள்ள துணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு (௭)

358. தேடரிய செம்பொருளைத் தேர்ந்துபொன்னுள் கண்டப்
கோடிவகை செய்தாள் குமரேசா—பீடில [தற்கேன
பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு (௮)

359 சண்டேசர் தாளெறிந்தும் சார்ந்துநோய் சாராமல்
கொண்டார்சீர் என்னே குமரேசா—உண்டான
சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். (௯)

360. உற்றநோய் ஒன்றும் உறுதேன சுதீக்கண்ணர்
குற்றமிலரின் புற்றார் குமரேசா—பற்றிநின்ற
காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய் (௰)

௩௬-வது மெய்யுணர்தல் முற்றிற்று

366 கூடும்வா வுக்கஞ்சிக் கோசிகரும் மாகதரும்
கோடியேன் சென்றார் குமரேசா—நாடியென்றும்
அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா (௬)

367 சாரும் அவாவறுத்த தத்தாத் திரையரின்பம்
கூர்ந்தனரா ரென்னே குமரேசா—நேரும்
அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும் (௭)

368. அன்று மழிசையின்பம் ஆர்ந்தார் அவாவுற்றுக்
குன்றினரேன் நால்வர் குமரேசா—என்றும்
அவாவில்லார்க் கில்லாகும் துன்பம் அஃதுண்டேல்
தவாஅது மேன்மேல் வரும் (௮)

369. என்றுமுறு இன்பத்தை ஏன்றோ பிருகுமுனி
குன்றுமல் கொண்டார் குமரேசா—குன்றாத
இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னும்
துன்பத்துட் டுன்பங் கெடின் (௯)

370. அன்றேன் அரியசுவா ஆசையற்ற அப்பொழுதே
குன்றுஇன் புற்றார் குமரேசா—என்றுமே
ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும். (௰)

௩௭-வது அவாவறுத்தல் முற்றிற்று.

376. கட்டிவைத்தும் தத்தனமுன் கைவிட்டான் ஏலேலன்
கொட்டியுமேன் பெற்றான் குமரேசா—முட்டப்
பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம (௬)

377 ஊட்டி அமுதசுரா உண்ணாது தொழிந்தாரேன்
கோடி தொகுத்தும் குமரேசா—நாடி
வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தல் அரிது (௭)

378. தள்ளா வறுமையுற்றும் சத்திமுத்தர் நற்றுறவு
கொள்ளாத தென்னே குமரேசா—உள்ளித்
துறப்பார்மற் றுப்புர வில்லார் உறற்பால
ஊட்டா கழியு மெனின் (௮)

379 அன்றுதுயர் எய்துங்கால் அல்லலின்றிச் சச்சந்தன்
குன்றாதே நின்றான் குமரேசா—என்றுமே
நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன் (௯)

380. சிந்துபதி முற்சூழ்ந்தும் தோந்துபரிச் சித்துநின்றும்
குந்தியேன் மாய்ந்தார் குமரேசா—முந்துகின்ற
ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும் (௰)

௩௮-வது ஊழ் முற்றிற்று.



அறத்துப்பால் முற்றிற்று.

சிவமயம்

# அறத்துப்பால் அதிகாரங்களின் முதற் குறிப்பு.

கடவுள்வான் நீத்தார் அறன்வலி இல்வாழ்க்
　　கைத்துணை புதல்வரன் புடைமை
உடன்விருந் தினிய செய்ந்நன்றி நடுவின்
　　உயர்நிலை அடக்கமின் ஒழுக்கம்
மடனறு பிறனில் பொறைஅழுக் காறு
　　மறன்வெஃகாப் புறன்பய னின்மை
கொடியதீ வினைஒப் புரவறி வீகை
　　தலப்புகழ் அருள்புலால் மறுத்தல் (1)

மாசறு தவங்கூ டாவொழுக் கள்ளாமை
　　வாய்வெகு ளாமை இன்னாமை
தூசறு கொல்லா மைநிலை யாமை
　　துறவுமெய் யுணர்வவா வறுத்தல்
பேசறு மூழே அறத்துப்பால் இதனைப்
　　பேணியுட் கொள்ளுவோர் பிறவித்
தேசறு பயனை யெய்தின ராகித்
　　திருவருட் செல்வமும் பெறுவார். (2)

உ

சிவமயம்.

# திருக்குறட் குமரேச வெண்பாவின்

## முதற் குறிப்பகராதி

# திருக்குறட் குமரேச வெண்பாவின் சிறப்புப்பாயிரம்.

---

## ஸ்ரீமான் C. V. கிருஷ்ணசாமி ஐயரவர்கள்
## Secretary Civil Justice Committee, Culcutta.

எனது நண்பர், ஸ்ரீமான் ஜெகவீரபாண்டியனவர்கள் செய்துள்ள திருக்குறட் குமரேச வெண்பா என்னும் நூலையும் அதில் குறள்களை எடுத்தாளும் பான்மையையும் ஊன்றி நோக்கினால், ஒரு மெய்யன்பன் தான் வழிபடு கடவுளின் திருவுருவத்தை மார்போடணைத்து இறுகத் தழுவி மகிழ்வதுபோல் எனக்குத் தோன்றுகின்றது. பாண்டியனவர்களுடைய சிறந்த அறிவும், விரிந்த புலமையும் சுவை ததும்பிய சொல்வன்மையும் இந்நூலால் எவர்க்கும் இனிது புலனாம்

C. V. கிருஷ்ணசாமி, கல்கத்தா

---

## ராவ் சாகிபு ஸ்ரீமான் வே. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் எழுதியது.

திருக்குறட் குமரேச வெண்பா என்னும் இந்நூல் மிகவும் அருமையான ஒரு பெரிய நூல். வடமொழியில் காளிதாச மகாகவி செய்துள்ள அலங்கார நூல்போல் ஸ்ரீமான் ஜெகவீரபாண்டியனவர்கள் இந்நூலைத் தென்மொழியில் செய்துள்ளார்கள். சுருக்கமான திருக்குறளும் அதன் பெருக்கமான இந்நூலும் முறையே வித்தும் மரமும் ஒத்திருக்கின்றன. இந்நூல் சொல் நயம், பொருள் நயம்,

தொனி நயம், முதலிய பன்னயமு மலிய நிலவி வாசிப்போர மனத்தை மகிழ்விக்குமாறு வாய்ந்திருத்தல ஆசிரியரது சபா ரஞ்சகப பிரசங்க சாதுரியத்தை அநுபவித்து அறிந்தோர ககு அதனை நினைவுறுத்தும என்பதில ஐயமில்லை. தமிழ அறிந்த ஆடவர, மகளிர், இளையோர, முதியோர, எல்லோ ரும எளிதாகவும, இனிதாகவும படித்து இம்மை மறுமைப பயன்கள் இரண்டையும எய்துமபடி இந்நூல இயற்றப் பெற றிருககின்றது

வே ப சுபபிரமணிய முதலியார,
24—12—1924 வெளளகால்.

ஸ்ரீமான் K. சுப்பிரமணிய பிளளை அவாகள் M. A , M L ,
"Advocate, Tagore Professor of Law" சென்னை.

அன்பார்நத ஐயா , நலம கேடக ஆவல். தஙகள குமரேச வெண்பா கடவுள் வாழததுப பகுதி கைவரபபெற றுப பாாதது மகிழவெயதினேன் தஙகளது தெளிவான இனிய தமிழ நடையும சொறபொருள் விளககுந திறனும கறறா யாாககும கழிபேருவகை தரும பானமையன. தங் களது பனனூலாராயசசியும இநநூறகண் இனிது திகழ் கினறது திருககுறட பெருநூலை எளிதாகவும விளக்கமாக வும திடபமாகவும உணாந்து இனபுறததறுத தஙகள நூல சிறநத கருவியாகும எனபது என கருதது

K சுப்பிரமணியம், சென்னை.

திருசசி, ஸ்ரீமான் ந மு வேங்கடசாமி நாட்டார அவாகள்
கலாசாலைத் தலைமைத் தமிழ்ப புலவா.

அனபுமிகக ஐயா, நலம

தங்கள திருககுறட குமரேச வெணபாவின முத லிரணடு பகுதிகளைப படிததுபபாாததேன தஙகள விரிநத

புலமையும் செய்யுள் இயற்றுந் திறனும், கட்டுரை எழுதும் வன்மையும் நன்கு அறிந்து பெருமகிழ்வெய்தலானேன். செய்யுட்கள் எல்லாம் மிக்க நயமுடையனவாயும், பொருத்த முடையனவாயும், பொருத்தமான கதைகளைக் கொண்டன வாயும் திகழுகின்றன. உரையின் நடைப்போக்கும் இன்பம் விளைக்கின்றது. இந்நூலினைக் கற்போர் கல்வியின் பலவகை நலங்களை ஒருங்கே துய்ப்பர் என்றும், இஃதொன்றே தங்கட்குப் பெரும் புகழை நிறுத்தவல்லது என்றும் நான் உண்மையாகக் கருதுகின்றேன். தமிழுலகம் தங்கட்கு என்றும் பெரிதும் கடப்பாடு உடையதாகும்.

22—12—24 தங்களன்பன், மு. வேங்கடசாமி

ஸ்ரீமான் S சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் B A, L T,
Deputy Inspector of Schools, Walajapet

உலகம் போற்றும் உயர்தனி நூலாகிய திருக்குறளின் கருத்துகளைத் தக்க எடுத்துக்காட்டுகளால் தாங்கள் விளக்கிச்செல்லும் அருமை பெரிதும் பாராட்டற்குரியது. தாங்கள் எழுதுந் தெளிந்த தமிழ் நடை, தமிழ்க் கல்வி நிரம்பப் பெற்றோர்க்கும் இன்பமும் பயனும் பயவல்லது. தங்களது ஆழ்ந்தகன்ற தமிழ் நூலாராய்ச்சி, இங்ஙனம் தமிழ்மறை விளக்கத்திற்குப் பயன்பட்டிருப்பது எவர்க்கும் உவகை தரக்கூடியதோர் நிகழ்ச்சியாகும். தங்கள் நூல் என்றும் நின்று நிலவும் என்று கருதுகின்றேன்.

4—12—1924 ச. சச்சிதானந்தன்

பண்டுலகை இனிதாண்ட பாஞ்சாலங் குறிச்சிமன்னர்
கண்டுநின்ற திண்குலத்தே கதிரவன்போல் எழுந்து திசை
மண்டுபுகழ்ச் செகவீரபாண்டியனார் மதிநூலைக்
கண்டுகொண்டேன் உணர்தோறுங் கழையிலின்பே காண்கின்றேன்

Doctor, முனியாண்டியா பிள்ளை

## ஸ்ரீமான். E. K. நடேச சர்மா அவர்கள்

### S. A. V உயர்தரக் கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியர்

அருந்தமிழ் அறிந்த பெருந்தகை நண்பீர்
தெரிந்ததை யானும் செப்புவன் கேண்மோ
ஓதற் கெளிதாய் வேதப் பொருளாய்
எல்லாப் பொருளும் இனிதாகக் கொண்டு
பொய்யா மொழியெனும் புகழ்மிக்க கொண்ட
வள்ளுவப் பெருமான் வாய்மொழிப் பாவை
உள்ளுற வைத்தன உயர் இலக்கியமாய்
புலவர்கள் கொண்டு பொருள்பெற நிறுவி
வெண்பா எனும் ஒண்பா வாக்கிப்
பதமும் பொருளும் பாட்டும் காட்டும்
நயமும் நலனும் நனியும் திகழச்
சொல்லணி பொருளணி எல்லாம் பொதுளத்
திருக்குறட் குமரேச வெண்பா எனும்
அரும்பெரும் நூலை ஆக்கி அருளினன்
அன்னை பாரெனின் அறைகுவன் சிறந்தே
அமிழ்தினும் இனிய தமிழ்நாடு செய்த
அருந்தவப் பயனாப் பொருந்திய பண்பினன்
திருமிக ஜெகவீர பாண்டியன் எனும்
பெருநா வலர்புகழ் ஒருநா வலவன்
இன்னை நூலை முன்னாள் மன்னர்
காணில இவன்சீர் காணவல் லாரயார்
இன்னுள அதனை எண்ணி எனப்பயன்!
ஆயினும் அன்பிர அதன்சிர ஓர்ந்தே
நீதியும் அறமும் ஒதி புணர்பின
நாடும் ஊரும் நலந்திகழ் தமிழ்ப்
செழித்தது தழைத்தது திகழ்த
தொண்டுசெய் தாயினே தொண்டுசெய் தாயினே

1—2—27 ] இ. கே. நடேசசர்மா

## H A POPLEY

*National Religious Work*

*Secretary, South India*

I have much pleasure in expressing my great appreciation of "Thirukkural Kumaresa Venba" which is being published by M R Ry. Jegaveerapandian Avl of Tuticorin I have been a subscriber to the publication from the outset and have very much enjoyed reading the numbers as they have come out. The illustrations to the various Kural verses are very apt and are couched in phrases which well fit the original. They are also very instructive in illuminating the meaning and purpose of the original

The author has tried to be simple and exact and has produced a work that will be of real use to people in the Tamil country who desire to study this wonderful classic and to apply its teachings to everyday life.

I trust that the work will have a large circulation and heartily commend it to all Tamil scholars and to the Tamil public.

**H. A. POPLEY,**

14th October 26. Madura.

The Honourable Devan Bahadur
SIR T N SIVAGNANAM PILLAI Kt ,
"THE HERMITAGE" LUZ, MYLAPORE,
MADRAS
23rd June 1926

I have perused with great delight a few parts of **Thirukkural Kumaresa Venba,** and have much pleasure in recording my appreciation of this remarkable literary production The terse couplets of the original are beautifully worked out into Venba Quatrains The verse of Valluvar, which oftentimes appears obscure to the ordinary untrained student of Tamil shines in a clearer light in the new setting I may say that the first part of each Quatrain serves as a happy foil to the second, which is the original couplet itself incorporated verbatim in the new stanza The commentary appended to each stanza is an interesting and novel departure from the traditional mode of annotating Kural. and deserves every praise for its lucidity of exposition, exhaustiveness, and wealth of illustrations and parallels from equally renowned Tamil classics I am sure therefore that this work will form an invaluable addition to every library, public and Private

T. N SIVAGNANAM
Minister for Development,
Madras Government

## அமெரிக்கன் கலாசாலைப் பண்டிதர்
## ஸ்ரீமான் காரமேகம் அவர்கள்

சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல், அழகில இணையற்று விளங்கும் திருக்குறட் பாக்களுக்குத் தாங்கள் இணைத்திருக்கும் கதைகள் அடிகள் குறட்பாக்களைப் போலவே அழகுற்றுத் திட்பநுட்பஞ் செறிந்து விளங்குகின்றன. தாங்கள் அளிக்கும் இச்சிறந்த விருந்துக்குத் தமிழுலக முழுதும் பெரிதும் கடப்பாடுடையதா யிருக்குமெனபதில் சிறிதும் ஐயமில்லை

ஆ. காரமேகம், மதுரை.

---

### இசைமுடியார்

செந்தமிழப் பாண்டிய மியற்றும் செழுந்தவத்தின் திருவுருவாயச்
செனித்துச் செந்தேன
அந்தண அலா மகனுருவன அருள்கவியாரந் திடு கதைசோத்
தனபாற கந்தன
நந்தலில வெண்பாவென என றேடு முய்ய நவினறசெக
வீரமாறன
கந்தமலர்க கழ லிணையென கருத்துருகச் சிரத்தணிந்து
கருப்பை நீப்பாம.



செந்திலாண்டவன் றிருவடி வாழ்க